

இலாஹி

# சரீகத்து விளக்கக் கீர்த்தனை.

இஃது

இராமனாதபுரம்ஜில்லா திருப்பத்தூர்

மதுரகவிமகுமூதுமுத்துபாவாப்புலவர் அவர்களின்

பௌத்திரரும்

ஷெயூர் முஸ்லீம் கலாசாலை உபாத்தியாயர்

முகம்மத்காதரிப்ருகீம் புலவரவர்களின் புத்திரருமாகிய

**அப்துல்கரீம் புலவரவர்களால்**

இயற்றி

---

ஷெயூர் தேவஸ்தான நட்டுவம்

சுந்திராசு பண்டிதரின் புதல்வர்

நாகசுரம் காளிமுத்துப் பண்டிதரவர்களால்

இராக தாளங்களமைத்து

---

மதுரை, புதுத்தெரு

…ருஷ்ண பிரஸில்

…ப்பிக்கப்பெற்றது.

…ட்] 1932 விலை அணா 3



இலாஹி.

# சரீகத்து விளக்கக் கீர்த்தனை.

இஃது
இராமனாதபுரம்ஜில்லா திருப்பத்தூர்
மதுரகவி மகுமூதுமுத்துபாவாப்புலவர் அவர்களின்
பௌத்திரரும்
ஷியூர் முஸ்லீம் கலாசாலை உபாத்தியாயர்
முகம்மத்காதரிப்ருகீம் புலவரவர்களின் புத்திரருமாகிய

## அப்துல்கரீம் புலவரவர்களால்

இயற்றி

ஷியூர் தேவஸ்தான நட்டுவம்
சொக்கநாத பண்டிதரின் புதல்வர்
நாகசுரம் காளிமுத்துப் பண்டிதரவர்களால்
இராக தாளங்களமைத்து

மதுரை, புதுத்தெரு
ஸ்ரீ கிருஷ்ண பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர் காப்பிரைட்] 1932 விலை அணா 3

# முகவுரை.

ஆதிமத்யாந்த ரகிதனுயுள்ள ஹஃசுபுஹானகுவத்தஆலா தன் அருட்பெருங்கடாக்ஷத்தால் படைப்புண்ட ஆன்மகோடிகளிடத்துத் தானடைந்துள்ள அன்புமிகுதியால் அவைகள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களை அடைந்துய்தற்பொருட்டு சரிகை, கிரிகை, யோகம், ஞானம் என்னும் நான்குபடி நிலைக்கிரமங்களை மனித ஜீவருக்கே சிறப்பாயுதவும்படி சிருஷ்டி தொடுத்து அனந்தானந்த தீர்க்கதரிசிகளையும் அவர்கள் மூலம் வேதாகமங்களையும் இவ்வுலகிலனுப்பினன். அந்நான்குபடிகளையு மொருங்கே யனுபவித்தலாகாமையின் ஒவ்வொரு சாராருமொவ்வொருபடி நிலையை யனுஷ்டித்து ஒவ்வொரு பிரயோசனத்தை யடைந்தார்கள். இறுதியாக வந்த மக்காதிபர் நபிமுகம் மதுமுஸ்தபாறசூல் சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் ஒரேகனியில் தசை, கொட்டை, பருப்பு, மூளை ஆகியவைகள் அமைந்ததுபோல், ஒரே வணக்கத்தில் நான்கு புருஷார்த்தங்களுஞ் சித்திக்கும்படி பரிசுத்தம், கெவுரவம், ஏகத்துவம், மகிழ்ச்சி முதலிய யாவும்பொருந்தி யாவரும் எளிதிலியற்றுந் தன்மையவாயுள்ள வணக்கமாகிய சரகென்னுஞ் சட்டத்தைப் பொதிந்த புருக்கான் வேதத்தை அரபிப்பாஷையிற்றந்தருளினர் அதை மறுபாஷையினர்களும் அறிந்துய்யும் பொருட்டு இல்மில் மிகுந்த விமாம்கள், பார்வஸிமுதலிய பாஷைகளில் மொழிபெயர்த்தீந்தனர். மாட்சிமைபெற்ற மகா - ர - ர - ஸ்ரீ மதார்சாகிப் புலவரவர்கள்

செந்தமிட்டொங்கற்பாவால் பறுலுமாலை என்னும் பட்டத்துடன் பரப்பினர். இப்பாவை நந்தமிழ் நாட்டின் பல பள்ளிக்கூடங்களிற் பயிலும் முஸ்லீம் மாணவர்கள் ஆரம்பக்கல்வியிலொன்றாகவேபண்டு தொட்டின்றளவும் பழகிவருகின்றனர். எனினும் மேற்படி பாவைப் படிக்கும் மாணவர்கள் மனதுள் பதியாதுவிடுத்து அனுசரீகப் பொருளமைந்த சங்கீதப்பாக்களைப் பாடித்திரியும் சிறுவர் பாலியர் பலரைக் கண்ணுற்ற யான் காலமேற்கச் சீலமாறுவது சகசமாதலின் காலத்திற்கேற்பப் பழையனகழிதல் புதியனபுகுதல் என்ற முறையை யனுஷ்டித்தும் முஸ்லீம் சமூக முன்னேற்றத்திற்கு ஊன்று கோலாயுதவுமெனக்கருதியும் மேற்படி பறுலுமாலையை மொழிபெயர்த்தும் அராபிக்கிதாபுகளிலுள்ள விஷயங்களை யாராய்ந்த வாலீம்களிடமாலோசித்தும் கழிவனகழித்துப் புகுவனபுகுத்தித்தற்காலத்திற்கேற்ப எளியதமிழில் கீர்த்தனப்பாவாகவியற்றி ராகதாளங்களமைத்து பாடற்கேற்ற வர்ணமெட்டமைந்த அட்டவணையுடன் அச்சிட்டிருக்கிறேன். நம்முஸ்லீம் சகோதர சகோதரிகள், மற்றும் மோட்ச விருப்பமுள்ள யாவரும் இதை வாங்கிப்படித்து அதன்படி இயற்றி இகபரவாழ்வும் இறைவனருளும் பெற்றுச் சதானந்த மகிழ் வெய்துமாறும் மிகத்தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னும் பல உசாவுதலில் பல விஷயங்களைச்சேர்த்து அலங்காரமானபல வர்ணமெட்டுகளில் இயற்றிவெளியிடவிருப்பம். இப்பாடலிற் முக்கியமாய்ச் சேர்க்கவேண்டிய விஷயங்களறிந்த அன்பர்களெனக்கறிவித்தாலதனைக் கண்போலெண்ணியன் போடேற்று அச்சிடுவிப்பதிலவர்களினமம் பொறிக்கப்படும். இன்ஷா அல்லா.

இப்படிக்கு,

☞ அப்துல் கரீம் புலவன்

# கீர்த்தனைகளின் வர்ணமெட்டு

## விபர-அட்டவணை.

1 கந்தா சாருண்யனே
2 ஆண்டிப்பண்டாரம்
3 மார்க்கத்திற்கண்ட
4
5 தேட்டாளியான முன்
6
7 பயம் வேண்டாம்
8 [பிளேட்]பாமாகதவை
9 சுயராஜ்ஜியமதிகதூரமி
10 பூவருந்திருவே
11 தசரதராஜகுமாரா
12 ராஜவிசுவாசலாலா
13 கண்மணியே யின்னுங்
14 சுருளிமலைமீதின் மேவு
15 இனிமேலாகிலுந் துணை
16 மானேஎந்தன் மனமுரு
17 பித்தந்தெளிய மருந்தோ
18 (பிளே)தயவிலாததேன
19 ஷிதாரணியிலன்புகே
20 மன்றுளாடியவா
21 குமரனையே பாடிக்கோ
22 செந்தூர்வேலாண்டி
23 யார்போய்ச்சொல்லுவா
24 தினந்துதிப்பாய்நெஞ்சே
25 சூரகுலசம்ஹாரா
26 ஜெகத்குருபரஷண்முகா
27 அனந்தங்கோடி முனிவர்க
28 காமசுந்தராங்கியுனது
29 மயில்வாகனமேறி
30 ஆனந்தக்களிப்பு
31 நொண்டிச்சிந்து
32 மார்கழிமாதந்திருவாதிரை
33 ஆசையுண்டாகத் தடை
34 (பிளேட்) சிந்தாமணியின்
35 ஆசையுண்டாகத்தடை
36 கார்க்கலாகாதா [பிளேட்]
37 அடேக்குமல்லிகைதொடேக்க
38 ஐயாபழனிமலை வேலா
39 குச்சுக்காரிகளின்கூட்டம்
40 சத்தியருள் கண்மணியே
41
42 பாண்டியனீன்ற மீனாக்ஷி
43 மாமயிலின் வீரா
44 ரவிகுல ஸ்ரீராமச்சந்த்ர
45 (பிளேட்)சிதம்பரம் போகா
46 பெண்கொண்டபேர்பட்ட
47 பரமானந்த மெய்ப்பரங்
48 மன்றுளாடியவா

4, 6, 41, கீர். கீர்த்தனைகள் புலவர்களின்
நூதன மெட்டுகளானபடியால் வர்ணமெட்டு எழுதவில்லை.

இராமனுதபுரஜில்லா, திருப்புத்தூர் மதுரகவி
மகுமுதுமுத்துபாவாப்புலவரவர்களின் புத்திரரும்
ஷியூர் முஸ்லீம் கலாசாலை உபாத்தியாயருமாகிய
முகம்மத் காதிர்ப்ருஹீம் புலவரவர்களாலியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

உததிசூழுலகி னுயிரனைத்தனைத்
தனைப்பரியப்பரிந் தூட்டுமேகனை
யொளிவெளியார்ந்த வோதருஞானத்
தன்மையினென்றித் தூதெனவுவப்பப்
பண்பமையோத்துப் பாங்குறத்திருத்திப்
பார்மிதிற்குரு வாமிறசூலாய்
வந்தவதரித்துத் தொழுகையினெறியின்
மாருதோங்க வழிமுறைகாட்டிச்
சரிதையினடவுகள் சகலமுமரபியிற்
றக்கியவிமாங்கனி பாவுரைதந்த
வினியசொற் றமிட்டொங் கற்பாவென்னும்
எழில்பதுல்மாலை யெனப்பெயர்தொகுத்த
மாதவப்பேருறு மதாருசாகிபு
வாயுரைவழியிற் றரணியிலுள்ளோர்
எளிதாய்விளங்க விச்சங்கீதத்தா
லியற்றுமிப்புவிபுகழ் தென்றிருப்புத்தூர்
நகரதின்வாழும் நல்லோராசிர்
நாட்டுமதுர கவிதிருமுத்து
பாவாப்புலவர் பயந்தநற்புத்திரன்
பாவலன்முகம்மத் காதரிப்ராம்
அருந்தவப்புதல்வ னழகியதீனே
ரகமகிணல்லா னற்றமிட்சீர்த்தி
பெற்றான்சரீகத் விளக்கக்கீர்த்தனை
பெட்புறவமைத்தா னப்துற்கரீமே

1



இலாஹி.



# சரீகத்து
# விளக்கக் கீர்த்தனை.



## காப்பு.

### கலி விருத்தம்.

அஞ்சொலான பிஸ்மில்லல் ஹம்ந்தொடு
மிஞ்சொலாஞ் சலவாத்து மியம்பியே
செஞ்சொலாய்ச் சரீகத்தின் பதஞ்செப்பு
மெஞ்சொலுக் கிறைபோன்பதங் காப்பதே.

## நபிநாயகர் துதி.

### பதிநான்கு சீர்கழிநெடிலாசிரிய விருத்தம்.

விண்ணிலே யிருந்ததெங் கேயேக வெளியொளி
விரிந்துநிலை நின்றதெங்கே
வேதமெங்கே சுவன னீதமெங்கே யேனை
வினைசுவவு தானமெங்கே
மண்ணுலவு மெழுவகைப் பிறவியுயி ரெங்கே
மதிக்குணர வுருவதெங்கே

மட்டிட் டிடற்கரிய புதுமைக ளனந்தமிம்
மகிதல மியைந்த தெங்கே
விண்மீ னிறைந்ததெங் கேவேலையெங்கே
விரிந்திணை கொள்விசுவ மெங்கே
வித்தகத் துயர்புனித ருறைவதெங்கே மோட்ச
வீடெனப் புகல்வதியாவும்
பண்ணரிய மகுமூதெனும் பொருட்டேமணிப்
பதியினில் விளைந்ததன்றோ
பகரரிய நபிதிருத் தாளடியி றைஞ்சினேன்
பத்திதக் கருள்புரியவே

---

## நபிமார்கள் ஒலிமார்கள் மற்றுளோரின் துதி.

### சந்தக் கலிவிருத்தம்.

நீதியான நபிகள்முறுசலீ னேரும்யார்களின் மூவிருவோர்களின்
மாதியானவொலிக ளசைனுசைன் மற்றுளவசு காபுலமாக்களின்
ஓதுமாவி முயர்முசு லீமொடு முற்றமூமின் புலவர் பதங்களை
ஏதுவாய்ப் பணிந் தின்சுவைக் கீதத்தா லியானுரைத்த பனுவலிதா
[மரோ

---

## அவையடக்கம்.

### கலி விருத்தம்.

முத்தமிட்கட னீந்தி முடிபுனை
புத்தமப்புல வோரிடை யூமையன்
கத்துமாறு வணங்கிக் கழறினேன்
குத்தம்நீக்கிக் குணங்கொளு மாறரோ.

---

## நான்முகம்.

### எழுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஆதியைநபியைசடத்தையீமானை யறிவினை முழுக்கை யிஸ்லாத்தை
நீதியையுலுவைத்தயமத்தைத் தொழுகைநிகழ்பறுல்வாஜிபுசுன்னத்
தோதியமுஸ்த கபுவொடு முபாகு முற்றதோர்கருமக்றூஹ்முறிவும்
கீதமென் பாவாலுரைத்தன னிதனைக் கேட்டுள மகிழுந்தீனேரே.

### பதினன்குசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

திருநபிகணையகஞ் செல்ஹிஜிரியாயிரத் தேழைம்ப தாண்டின்மாதந்
திகடருஜமாதிலவ் வல்தேதிபனிரண்டு சேர்ந்தபிர சோற்பத்தியின்
வருதுமதியாம் புறட்டாசி நவநாளினில்வாய்த்தஜும்ஆவெள்ளியாம்
வளர்மதியினிற்காரை மாநகர்பஜார்ப்பள்ளிவளமுறுசுனத்சமாத்தின்
பெருகுமஜிலிசில்வரகன்னேரி மவுலவிப் பெலனுற்றசற்குநெறியின்
பிரபலர்முகம்மதப்துல்லாவெனுஞ்சுகுணபேஷிமாமவர்கள்முன்னில்
தரும்மொடு சுவனமுந்தர்துரட்சிக்குமிச் சரீகத் தெனும் விளக்கச்
சமரச சதானந்த கீதமப்துற்கரீம் தானரங் கேற்றி னேனே.

## 1 அல்லாவை அறியும் பறுலு.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஏகம்.

பல்லவி.

அல்லா ஒருவனை அன்போடறிகுவீர். (அ)

அனுபல்லவி.

ஆதியந்தம் நிறைவு குறைவுக
ளற்று ஒருநிலை பெற்றதனியனென் (அல்)
எல்லா வுயிர்கட்கு மீவா னிரணமென் (அல்)
கால் கை வாய் மூக்குச் செவி விழி
கா ணு மவயவந்தோணுதவனென (அ)

நின்றெவ் வுலகமும் நீதந் தருபவனென் (ற)
புலனில்லாம லறியும்வல்ல
பூரணப்பொரு ளாரணம்புக (ழ)
தென்பா யெவை கட்குந் தேவையுற்றுள்ள பொரு (ள)
படைத்துக் கொடுத்தழித்து வொருதலைப்
பட்ச மற்றருள் ரட்சக னெனு (ம)
உற்ற தேவைதனக் கொன்றுமில் லாதவனென் (ற)
லாயிலாக யில்லல்லாவென
வாயுமனதொத் தோதல்பறுலென (வ)

---

## 2 நபியையறியும்பறுலு.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-திஸ்ரஜாதி-ஏகம்.

பல்லவி

நாதரையறிவீர் இறை தூதரைத்தெரிவீர்நபி (நா)

கண்ணிகள்.

வேதத்தலைவரவர் மேவுமுடியறுஷதின்மேல்
பாதந்தருத்தராவிற்பார்வைமுன் னும்பின் னுமுள்ள (நா)
நீதத்தருமதுரை நிண்ணயருடம்பிலொரு
போதும்புழுப்பூச்சியீக்கள் பொருந்தாதுலருவந்த (நா)
பாதந்தரைதனிலே பாவாதவர்களுக்கு
யேதுமசதிமறதி யில்லைநித்திரையிலென்றும் (நா)
காதமெட்டுத்திசையுங் கஸ்தூரிவாடைதரும்
ஓதுமலஞ்சலக்க ளுற்றெவருங்கண்டிடாத (நா)
சீதமேகக்குடையின் சிறப்பி னுயர்ந்தமகு
முதர்க்குச்சாயைநிழல் மோதக்கிடையாதெனவே (நா)
இந்தநபியவர்க ளீரைந்துகாரணத்தைச்
சிந்தைதனி லுறுதி செய்தல்பறுலாகுமிந்த (நா)

## 3 தன்னையறியும் பறுலு.

இராகம்-அடாணு-தாளம்-திஸ்ரம்-அட்சரம் 3.

கண்ணிகள்.

தன்னையறியும் பறுலிருபத்துமூன் றாமிதனையறிவீர் அதில்
தன்றசைமூளையுந் தோலுதிரம்நான்குந் தாயின்பங்காந்தெரிவீர் (த)
இன்னுமெலும்பு நரம்புசவ்வுரோமமின்னான்குந்தந்தைபங்காம் மற்று
மேற்றமண்தண்ணிர்தீ காற்றுவெளியைந்துமினியமலக்கின்பங்காம்
முன்னறிவுநினைவுணர்வுபுத்திநான்குமுற்றதோர்றூகின்பங்காம்வரும்
மூச்சுடனேகேள்விபேச்சுப்பார்வை நான்குமுறையே றூகானிப்
பங்காம் (த)
சொன்னநல்றூகும் றூகானியுமேயந்த தூயவிறைவன் பங்காம்இதை
சோபனமாகவுளத்திருத்தித்தெளிந் தோர்க்கருளேயிங் காம் (தன்)

---

## 4 ஈமானில் மொத்தப்பறுலுகள்.

இராகம்-அமீர்கல்யாணி-தாளம்-திஸ்ரஜாதி-ஏகம்.

பல்லவி

ஈமானிலேபறு லாகுமிதையினி எல்லோருமே யறிவீர் கீதச்
சொல்லாலுமேதெரிவீர் (ஈ)

அனுபல்லவி

கோமானல்லாவெனுஞ் சீமானவன்சர்வ
கோடியுயிர்களும் நாடும்வல்லோனென்றும் (ஈ)

சரணம்.

தாமேயனைத்திலுஞ் சத்தாகவிருந்து
சாற்றும்மோட்சப்பதந் தந்திடவுவந்து
பூமீதுதித்துப் புருக்கான்மறைதந்த
புண்யநபியுண்டென் றெண்ணிநாவில்விண்டு (ஈ

## ஈமானில் பிரிவுபறுலுகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-சதுரஸ்ரஜாதி-எகம்.

கண்ணிகள்.

ஈமானிலேபிரிவுதாமே யாறுள்ளபறுல்
எடுத்துரைப் பேனறிவீரே இஸ்லாமுறையை வற்றபடிதெரிவீரே (ஈ

ஆமாவுலகனைத்துண் டாக்கிரட்சித் தழிக்கும் அல்லா
வொருவனுண்டென்றும் அவன்றன்பணி யாளர்மலக்குகளென்றும்
சீமானிறையோனவனு லேயனுப்பப் பட்ட
தீர்க்கதரிசிகள்சபி மார்கள்றசூல் திரர்களாமென வொப்பி (ஈ)

சேமாதி யோடவர்கள் மூலம்வே தங்கள்வந்த தென்றும்
நியாயத்தீர்ப்புநாள் ஒன்றுண்டென்றுர் நீங்கும்சலமும்நம்மையாள் ( )
கோமானவன்கற்பனை யாமென்றுயர்ந்த யீமான்
கொண்டு தரிப்படுத்திட குறையறவே கூறும்படியடுத்திட (ஈ)

---

## 6 ஈமானில் நீதிகள்.

இராகம்-கரகரப்பிரியா-தாளம்-ஆதி-அட்சரம் 8.

பல்லவி.

எட்டுநீதியுள நீமானதின்முறை யியம்பிடுவேன் கேளீர்இதமுடனே

சரணம்.

மட்டில்லாப் பிறர்பொருளாசை யொழித்தல்
மருவிய வோரவஞ் சகஞ்சொல்லா திருத்தல்
கெட்டியாக விசுலாத்தில் வருபவரைக்
கேடற்றவரெனவே நாடிப்புகழ்ந் திருத்தல் (எட்)

திட்டமாகப்பர தேசியாசகர்களைத்
தியகிந்தனைவகை செய்திடாதிருக்குதல்
கட்டுடனேகடுஞ் செட்டுநீக்கிநற்
காரியமுடன்வியா பாரநடத்திடுதல். (எ)

குற்றமற்றபெரி யோரிடமறிவுகள்
குணமுடனேபணிந் தனுதினங்கேட்குதல்
வெற்றிதரும்படி யேவல்களெடுக்குதல்
விலகலைவிடுக்குதல் புலனதையொடுக்குதல் (எ)

கட்டியவுடையுட லிடமெனுமூன்றுங்
களங்கமில்லாவகை கழுவிடல்மெழுகல்
சட்டமெனவேமுனம் வகுத்தனர்நீதி
தனையனுதினஞ்செயல் தகுதியென்றோதி. (எ)

---

## 7 இஸ்லாத்தில் மொத்தப்பறுலு.

இராகம்-சிந்து-பைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

இசுலாத்தி லிலங்கும்பறுலிதுவே (இசு)

அனுபல்லவி.

இன்பமேபெருகும் அன்பரேநமது (இசு)

சரணம்.

இறைவனுமமன திருத்திநிண்ணயமாய்
இனியமறையிலெடுத் தியம்பியவிதமாய்
முறையோடேவலெடுத் தொழுகிநல்விதமாய்
முற்றுமேவிலக லற்றுமேவிடுவீர் (இ)

---

## 8 இஸ்லாத்தில் பிரிவுபறுலுகள்.

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி. அட்சரம் 4.

பல்லவி

அன்போ டறிவீரிசுலாம் அதன்பிரிவ தைந்தேயறிதல் பறுலாம் (அ)

அனுபல்லவி.

ஆதிஷகாதத் கலிமா வோதியுளத்தே தெளிந்து (அ)

சரணம்.

தூய்யதொ ழுகைதனைத் தொடர்ந்தைந்து நோம்
சோராதியற்றி வருவாய் சுகமே பெறுவாய் துரிதமதில் (அ)
மெய்யருள் றமுலானில் மேவியநோன்பதை
மிக்கமுறைப்படி வைப்பீர் மிடிமை யறுப்பீர் மேன்மையுற (அ)
செய்யு மெளியவர்க்குச் சீருடனே சக்காத்து
செப்பும் நூற்றுக்கி ரண்டரை தெளிந்தி தன்முறை திறப்படுத்தி
கைப்பொரு ளுந்துணையுங் கண்டுவழிநடக்க
மெய்யிற் பயமுமில்லையேல் விதித்தஹஜ்ஜு மேல்விரைவுடன்சென்
சொன்னவிப் பறுலைந்துஞ் சுத்தமுடனறிந்து
திண்ணய மாயுளத்தினில் நிலைநிறுத்திநல் நீதம்பெருக (அ)

---

## 9 சரீகத்தின் ஒழுங்குகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி-ஏகம்.

கண்ணிகள்.

சரீகத் தொழுங்கிலைந்து தாலுண்டதை யறிவீர்
சங்கை நபிவழியைத் தான்றெரிவீர் (ச)

வணக்கத்தில் தீவிரம் வைத்து வயிற்றிற்பசி
வாகுடனே யிருக்கும் வழிபெறுவீர் (ச)

சுவைகரு தாதுணைவு சுகிர்தமுடனே கொள்வீர்
தூயவார்த்தைகள் நீதத்துடன்பேசுவீர் (ச)
காட்ட முடனேகிதம் நல்லகாரியங்களை
காளு மறிந்துசெய்து நலமடைவீர். (ச)

---

## 10 சரீகத்தின் வாஜிபுகள்.

இராகம்-சிந்துபைரவி-தாளம்-திஸ்ரஜாதி-ஏகம்.

கண்ணிகள்.

நேசரேவாரீர் சரீகத் வாஜிபைக் கேளீர் முவலீம் (நே)
நீதமுலாணி வீதினிற்பித்துரைத் திதறக்கொடுத்துப்பாதகமற்ற()
பர்துஜனங்களுக்கே உதவி யெந்தநாளும்புரிந்தே இரவில்
பழுதிலாதிஷா தொழுதுமுடித்து வழுவிலாவித்ர் தொழுவதா
மென (நே).

தாயர்தந்தையர்க்கே பணிசெய் தேயகங்குளிர்ந்தே மனைவி
தனதுபுருவஷர் குணமோடந்து மனதுமகிழத் துணையும்புரிதல்(நே)
ஹஜ்ஜுஞ்செய்திடவே மக்காவிற் கிச்சையோடெழவே அங்கு
அரியவுமுருப் புரியுமெனவே தெரியவுரைத்த முறையோரேழாம்.()

---

## 11 சரீகத்தில் சுன்னத்துகள்

இராகம்-காப்பி-ஆதி-தாளம்-ஏகம்.

பல்லவி.

முத்துமுகம்மதுற்றகுலே இறகுலே அருளாலே குருவாலே (மு)

சரணம்.

நித்தியசரீகத்தில் நிலைத்தசுன்னத்தே
நேருமெட்டு வகையை நிறுத்துவீர்மனத்தே

சித்திகருமெய்நபி நீர்க்கவிபாத்தே
செப்பியதையுணர்ந்துபாரும் மனந்தேரும் யலபேருந்தினந்தோரும்

சித்தமுடன் கத்னுச் செயலெட்டுவய்துள்
சிருடன்தாடிவைத் தனுதினமனதில்
பத்தியுடன் பெரியோரைப்பணிந்திடுதல்
பாவமேகுமதை செய்தே மனமுயதே கதியெய்தே மிகு நொய்தே

நத்துமிறைவனை நாளுமன்னிப்பும்
நாடிமுஸ்லீங்கட்கு நற்சலாஞ்செப்பும்
நித்தநோயாளிகள் தனையுபசரிப்பும்
நேர்மையுடனறிந்துநீயே நினைவாயே புரிவாயே தெரிவாயே (மு)

இத்துடனே முகச் சவரஞ்செய்திடுதல்
எழிலுறுநாசியான் குறிதலையொடுநல்
வெற்றிசேர்கமுக்கட்டு மயிர்களைந்திடுதல்
மேலுளமீசையுங்குறைப்பாய் நகமறுப்பாய் மிகவிருப்பாய் உவந்திருப்பாய் (மு)

---

## 12 நூற்றுமுப்பது பறுலுகளின் விபரம்.

இந்துஸ்தானிமெட்டு-இராகம்-சிந்துபைரவி-தாளம்-சதுரஸ்ரஜாதி

பல்லவி.

சாரும் பறுல் களின்தொகை தானறிவீர் இது தானறிவீர்

அனுபல்லவி.

பாரொரு நூற்றுமுப் பத்தென்ப தேவிபரம் (சா)

தொகையறு.

பட்சமுடனேமுழுக்கில்மூன்றுதயமத்தில்பதிவானமூன்றுமுலுவில்
பகருநான்காமின்னு மதுகபதில்நாலுமேபழையதலைமுறைநாலதும்,

பாட்டு.

படிமிசை வருமிசு லாமதி லேந்தும்
அறிவதி மானிலே யாறெனவந்து (சா)

தொகையறு.

நேரத்தி லேந்தின்னும் நிய்யத்தி லேந்துமே
நிலேயானதொழுகை யதனில்
நின்றதோர்பதின்மூன்று றக்ஆத்திற் பதினேழு
நேர்ந்தநோன்பினி லறுபதே

பாட்டு.

நிதநித மனதினி லிதைமற வாதே
சுகுமிகு மெனநெறி சொல்கவியிதே. (சா)

---

## 13 உலுவில்பறுலுகள்

இராகம்-கமாஸ்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

எங்குமிலங்கும் நன்மறை யியம்பிநின்ற(தெங்கு)

கண்ணிகள்.

தங்குமுலுவகையில் தானேநான்கு பறுலேச்
சங்கை யுடனறியவே சாற்றுவதாகி (எ)
துய்யஜலமெடுத்துச் சுத்தமுடன் முகத்தைத்
தூய்மை யுறக்கழுவுதல் சுகமுறவே (எ)
உண்மையுடன்முழங்கை யுள்படவேயிருகை
செம்மையுறக்கழுவுதல் தினமுவந்து (எ)
தன்மையுடன்சிரசு தன்னில்நாலிலோர்பங்கு
தண்ணீர் தொட்டுத்தடவுதல் தகுமெனவே (எ)
காலிரண்டுமேகணுக் காலுள்படக்கழுவல்
காணுமுலுவின்பறுலேக் கனிந்தொழுக (எ)

---

## 14 உலுவின் சுன்னத்துகள்

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி-யேகம்.

கண்ணிகள்.

உலுவினிற்சுன்னத்துகளீராறு அதை
உண்மையாயுணர்ந்து நிதம்பாரு இனி
உற்றநிய்யத்துச்செய்வதும் வெற்றிபிஸ்மிலோதுவதும்
ஒரு கதி சேரு

முன் துவாரமுங்கழுவிரெண்டு கையு
முன்கைமணிக்கட்டுள்படக் கொண்டு தின
மூவந்துகழுவிப்பல்லைத் தகுந்தபடி துலக்கிக்
கொண்டு இன்னு முண்டு

வாயதனைக் கொப்பளித்தவின்னும் இரு
வண்மைநாசிக்குந் தண்ணீரையுன்னும் படி.
வைத்ததனையுங்கழுவி மேய்த்திறமையும்பெருக
வென்னும் முறை நண்ணும்

தலைமுழுவதுந்தண்ணீர்தொட்டுக் கடவித்
தாடியைக்கோதிக்கழுவிவிட்டுப் பின்
தன்னிருகாதுக்குத்தண்ணீர் உண்மையுடனேதடவல்
உற்று மகிழ் பெற்று

கால்கைவிரல்களைக் கோதிக்கழுவி நீதி
கண்டொவ்வோருறுப்பையுமே தழுவி முக்கால்
கழுவல்தொடர்பிடியா யொழுகிவிரைவிற்செய்தல்
யிதே கசகாதே (உலு)

## 15 உலுவின் முஸ்தகபுகள்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-மிஸ்ரஜாதி-ஏகம்.

பல்லவி.

பதினேழு முஸ்தக புலுவிலறியும்படி பகர்ந்திடுவேன்கேளீர்
முசுலீமோரே பகர்ந்திடுவேன்கேளீர்

அனுபல்லவி.

துதிபெறுங்கிபுலாவை முன்னோக்கிக் கொள்வது
சுகமுள்ளபோதுதவி தேடாதிருப்பது
சுகிர்தநிய்யத்துப் பகர்தல்வீண்மொழி
தவிர்தல்மனதினிற் கவர்தலினுமுள. (பதி)

சரணம்.

ஒவ்வோருறுப்புக்கள் கழுவும்போது பிசுமில்
ஓதியதற்குரிய நீதத்துவா வுமோதல்
செவ்வாய் நாசிக்குவலக் கையால்நீர் செலுத்துதல்
சிறந்தவிடதுகையாற் காலிரண் டுங்கழுவல்
ஒவ்வுமேடான விடந்தன்னிலிருந்துகொள்ளல்
உடலில்நோயற்ற திடமுள்ளவர்கள்முற் படவேயுளுச்செயக் கட
[னதினுமுள. (ப)

இருக்கமில்லாமோதிரந் திருப்பிவிட் டுக்கழுவல்
எஞ்சியநீரினில் கொஞ்சம் நின்றுபருகல்
உரைப்பதுலுவின்துவா சலவாத்துஞ் சகாதத்தும்
ஓதுவது யின்னாஅன் சல்னாமுன்று விடுத்தம்
வெறுக்கு மக்றூகில்லா வேளையில் உலுகயில்
விறைவிலிருறக்காத் திறைவன்றனைத்தொழ
முறையிதாமெனவுரைசெய்தார் நபி (ப)

---

## 16 உலுவின்மக்றூகுகள்

இராகம்-காம்போதி-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

தேரோமக்றூ கானது லுனில்
செப்பிடுவேன்பத்து மொப்பிடவேமனந் (தே)

அனுபல்லவி.

கூறேதிடதேகியுதவிக்கால்கூட்டுவதுமிகக்கேட்டைதருமென (தே)

சரணம்.

தண்ணீரதிகஞ் செலவுசெய்திடுதல்
தானதைபள்ளி முகத்திலறைகுதல்
பெண்களுலுச்செய்து மிச்சத்தண்ணீரையாண்
பிரயோகித்தேயுலுச் செய்தல்வீண்பேசுதல்
சுன்னத்தானசெய லொன்றேனும்விடுதல்
சுத்தமற்றதலங் குற்றமாகுமெனத் (தே)
ஒவ்வோருறுப்பையு மூன்றுமுறைக்குமேல்
உபயப்படுத்திக் கழுவல்தண்ணீரினுள்
செவ்வையாய்க்காலை யழுக்கியபடியே
திருத்திக்கழுவல் சிரசோர்முறைக்குமேல்
எவ்விதத்தாலுநீர் தொட்டுத்தடவுதல்
யாவுமுலுவினிற் பாவமெனமனந் (தே)

---

## உலுவின்முறிச்சல்கள்

இராகம்-சங்காபரணம்-தாளம்-திஸ்ரம்-ஏகம்.

பல்லவி.

பத்துமுறிச்சலுலுவிலிருக்குது பார்த்துத் தெளிவீரே இதைப்
பக்தியுடனறிந்தோடப்போருக்குப் பாக்கியம்பெரும்யோக்கியந்தரும்

சரணம்.

உத்தமரே முன்பின்னுள்ள துவாரத்தி லுற்றொது வாவுலுங் கசித்
தாரிவெளி வருமேனுஞ் சரீரத் துதிரம் புண்ணீருடன்சீழ்
முத்தி வடிந்தாலும் வாயில்வாந்தி ரத்த முற்பனமானாலும் சாய்ந்
தூங்கினாலும்மன மயங்கினாலும் போதை யுற்றாலுஞ் சித்தங் கெட்
டாலும் ஐயே (பத்)
சட்டப்படிக்குசசஜிதாறுக்கு உள்ள தனியோன்தொழுகையினில்மிகு
சந்தோஷத்தாலோ வியப்பாலோநகை சத்தம்பெறப் புரிந்தால்
கெட்டசெயல் ஆணோடாணும் பெண்ணோடுபெண் கிரமப்படி யாண்
பெண் குறி
கிட்டும்படிசெய லுற்றாலும்உ லுக் கெட்டுவிடுமிதை விட்டுவிடுமை
யே (பத்)

---

## 18 தயமத்தின்பறுலுகள்.

இராகம்-சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி

தயமத்தி லுளபறுல் மூன்று இது
தானறிந்துணர்வி லூன்று சான்று (த)

அனுபல்லவி

நியமமான நிய்யத் தோடே தரையில்
நேர்கரங்களை யோர்மையாயடித்
திலங்குமாமுகந் துலங்கத்தடவுதல் (த)

சரணம்.

மறுபடியுமிரண்டு மலர்க்கரந்தன்னை
மாசறத்தரையி லடித்ததின்பின்னே
வருமிருமுழங்கையுள்படவே தடவல்
உண்மையானநல் லுண்மையின்றய மந்தனிற்பறு லிந்தநீதியே .(த)

---

## 19 தயமத்தின் சுன்னத்துகள்.

இராகம்-பியாக்-தாளம்-திஸ்ரம்.

பல்லவி

சேமமிகும் தயமத்திற் சுன்னத் தெட்டறிவீரே
எட்டறிவீரே நபி திட்டமும்பாரே

தொகையறா.

மெய்யாகவே பிஸ்மிலோதுவது மோதிரமிருந்தாற்கழட்டிடுவது
மிக்கதரையினிலிருகைதட்டிடும்போதிலே விரல்களை விரித்திடுவது

பாட்டு.

மேதகுமிருகரங்கள் மேவிடமுன் தள்ளுவது
பேதகமிலாமலே யதைப்பின்னிழுப்பது (சே)

தொகையறா

செய்யுமிருகைவிரித் தவ்வண்ணமேயெடுத் தேபுறங்கையிரண்டுஞ்
சோலேதட்டிடுவ தொடுசிலதுசெய்வகை செப்புவேனின்னுமுண்டு

பாட்டு.

சீருடன் தொடர்பிடியாய்ச் செய்வதும் விரைவுடனே
நேர்மையொடு செய்வதுநல்ல நீதியாகுமே (சே)

---

## 20 தயமஞ் செய்கிறவஸ்துக்கள்.

இராகம்-உசேனி-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

செய்யுங்கள் தயமம் சில
நீதற்றவஸ்துக்க ளாறுண்டுறுதியாய்ச் (செ)

சரணம்.

துய்யகல்மண்மணல் சுண்ணாம்பினும் பின்னுஞ்
சுருமாக் காக்காப் பொன்னிற் சுத்தமறிந் தின்னும்
மெய்யாகவேயிந்த ஆறுவஸ்து முன்னம்
மேலவர்கள் சொன்னதா லதனைக்கொண்டு (செ)

வெய்யவன் னெருப்புக்களி லுருகி
வெந்து நீபோத பொருளொன்றி னருகில்
உய்யவே மானிட ருள்ளத்திற் றெரிகில்
உத்தம மாமெனச் சொற்றனர் நந்நபி (செ)

---

## 21 பறுலான முழுக்குகள்.

இராகம்-இந்துஸ்தான்காப்பி-தாளம்-ஆதி.

பல்லவி.

பண்புடனே பறுலான முழுக்குணர்வீர் (ப)

அனுபல்லவி.

அன்புமுதிர்ந்துமணி யங்குவெளிப்பட்டாலும்
தென்பாய்வரைமறையச் சேர்ந்தாலும்மாதரொடு (ப)

தொகையறு.

நித்திரைதெளிந்தபின் நினைவின்றியீரமது நேருறக்கண்டாலுமே
நேமமொடு கனவிலிஸ் கலிதமானாலும் வெறிநிறைவஸ்துவால்மேலு [மே

பாட்டு.

நின்றுமீறியபோதை நிலைமைதெளிந்தவுடன்
நன்றுபெறவேயீரம் நம்பிக்கண்டிட்டபோதும் (ப)

தொகையறு.

மங்கையர்கள்திங்கள் தொறுமாகும் பிரஸ்வடையிலு மகவீன்றபெண்க ளுதிரம்
மாறிடும்போதிலும் நேருடன்செய்வன மயங்காதுசெய்வது திரம்

பாட்டு.

மாசற்றிலங்கும் பறுலான முழுக்கிவ் வேழும்
நேசத்துட னறிந்து நீதியுற நடப்பீர் (ப)

---

## 22 வாலிபான முழுக்குகள்.

இராகம்-இந்துஸ்தானி-பியாக்-தாளம்-ஆதி.

பல்லவி.

வள்ளல்நபிகள் சொன்ன வண்மை மொழிகள் இது (வ)

அனுபல்லவி.

வகுத்தவாலிபா மிகுத்தமுழுக்கது
தொகுத்திரண்டெனப் பகுத்துணர்ந்திட (வ)

சரணம்.

மையம்முழுக்காட்டுதல மாசுற்றிசுலாத்திலே
வருபவன்முழுக லுரிமையாகுமெனத் திருமறையறிவு பெருகியே
மகிழ (வ)

---

## 23 சுன்னத்தான முழுக்குகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

சொன்னேன் அறிவீர் சுன்னத்தானமுழுக்கிலைந்து (சொ)

அனுபல்லவி.

வின்னமில்லாமலதை மேவியெடுத்துநடந்
தின்னலகல நபி தீனத்தின முவக்கச் (சொ)

சரணம்.

வெள்ளிக்கிழமையுள்ள நல்லஜு—ம்ஆவுக்கும்
மேன்மைக்குரிய ஹஜ்ஜ தாம்பெரு நாளுக்கும்
உள்ளமிலங்கியறம்லான் பெருநாளுக்கும்
ஒங்கரபாமலைபோய்த் தீங்கரத்தங்குதற்குஞ் (சொ)
இன்னமுரைப்பதுவந் திஹ்றாங்கட்டிடுதற்கும்
இன்பமுடன்முழுக லன்புகொண்டுமுவக்கும்
மன்னர்நபிகள்செயல் மகிழ்க்கெடுத்தாலடிக்கும்
மாசற்றிறைவனருள் நேசத்துடனிருக்கச் (சொ

## 24 முஸ்தகபான முழுக்குகள்.

இராகம்-காப்பி-தாளம்-ஆதி.

பல்லவி.

முஸ்தகபுமுழுக்கின் முறைபதினைலென
முறைபதினைலென மறைநபியோதினர் (முஸ்)

சரணம்.

அசுத்தமின்றி யிசுலாத்தில் வருபவனும்
ஆகுமே லயிலத்துல் கதிரிரவினிற்பின்னுஞ்
சிசுக்கள் பாலிக்கானுனுந் திகழ்பராத்திரவினுஞ்
சேருங்கூட்டத்தினின்று மேவெளியாகினும் (மு)

வெறிதெளிந்தவுடனும் முடியிறக்கியபின்னும்
வெய்யசூரியசந்த்ர கிரகணத்துக்குமின்னும்
உரியமய்யத்தைமுழுக் காட்டியவனுமெண்ணம்
உற்றுமழைபெய்திட நற்றொழுகைக்குமுன்னும் (மு)

புதியவாபரணங்கள் பிடவைபணிவதற்கும்
பொங்குசீமுதிரத்தைக் கண்களாற்கண்டதற்கும்
முதியபாவமன்னிப்புக் கேட்கமுடுகுதற்கும்
முழுமனதுடன்மக்கா மதீனவிற்புகுதற்கும் (மு)

## 25 முழுக்கில்பறுலுகள்.

இராகம்-பியாக்-தாளம்-ஆதி.

பல்லவி.

முழுக்கிலேபறுல்மூன்று வழிமுறைப்படிமனதிலூன்று (மு)

அனுபல்லவி.

முதலில் வாயைக் கொப்பளித்தல் (மு)

சரணம்

நாசிக்கு நீர்செலுத் திடுதல்சர் வாங்கமும்
நனையும் படியே குளித்தல் (மு)

## 26 முழுக்கில்வாஜிபுகள்.

இராகம்-மத்தியமாவதி-தாளம்-ஆதி.

பல்லவி.

முழுக்கில் வாஜிபை யறிவீர் முறைதெரிவீர் (மு)

கண்ணிகள்.

தலையினில் தாடி தனிலுளரோமம்
தன்னடிவரைநனைய வுண்மையுடனே யலம்பல் (மு)
மோதிரங் காதணி மூக்கணி களையும்
முற்றுமே திருப்பிவிட்டு வெற்றியுற வேகழுவல் (மு)
தண்ணீர் பொருந்திடாத தாங்கொழும்புமெழுகு
உன்னி யுடம்பில் நகத்தி லுற்றிடி னீக்கிக் கழுவல் (மு)
முழுக்கி லுள்ளவாஜிபு மூன்றமிது வெனவே
அழுக் கறுத்து நமக்கு ஆலநபி நாதர் சொன்ன (மு)

---

## 27 முழுக்கில் சுன்னத்துகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

பெருகியநீனின் வழிமுறையொழுகியே பேரானந்தங்கொண்டின்பம் பெற்றநர்நீரேரே வாரீர் முழுக்கிலுள்ள பிசகறச்சுன்னத்தைப்பாரீர் (பெ)

மகுடங்கள்.

திறமுடனிய்யத் தரிமையுடன்செய்தல் (பி)
தெரியபிஸ்மில் கூறுவதிருகைப்பு மேரியமணிக்கா மீருறக்கழுவுதல்
சிறப்பதாய்க்குறியுறக்கழுவுடல்சிறப்பமும்முறைபெறத்தணீர்விடல்
சிரறுநஜீசு சேருமிடமுழுதுங் கூர்மையுடன்கழுவல் தேருமொழு வெடுத்தல் (பி)
சித்தி பெறத்தின முற்ற முழுக்கதி லுத்தம வெழுவகை யைத்திற முடனுற (பி

## 28 தொழுகையின் வெளிப்பறுலுகள்

இராகம்-தன்யாசி-தாளம்-திஸ்ரம்.

பல்லவி.

தொழுகையின் வெளிப் பறுல்களேழுந்
தூயதாய்ப் பரிவுறமனதினி லறிகுவீரெனத் (தொ)

அனுபல்லவி.

சொன்னநேர மறிகிற தின்னந்
தொப்புள்முதல் முழங்கால்மறை விப்பதுடை யதனுவினித் (தொ)
தோகையர்மணிக் கட்டுமுகம் பாதம்நீங் கலாய் மறைத்தல் (தொ)

சரணம்.

நத்துமுடையுஞ் சரீரமுமிடமும்
நாளுந்துய்தாயிருப் பதுகிபுலாவை
உற்றுநோக்கல்நிய்யத் தின்னநேரமென்றும்
ஓதுதல்யா வும்மொழுங்கென நீதமுகம் மதரோதிய (தொ)

---

## 29 தொழுகையின் உட்பிரிவுகள்.

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

பல்லவி.

அறிவீ ரருள்நீதி யனுதினமும் (அ)

அனுபல்லவி

அழகிய தொழுகையி லிலகிய வுட்பறுல் (அ)
அறுவகை யெனவுரை தருமதன் விபரம (த)

சரணம்.

நிலையினிற்குதல் தக்பீர் நீதமுற வுரைத்தல்
நேருங்கிராஅத் தோதல் நித்யறுக்கூகுசெய்தல்
தலமகிழுஞ் சஜிதாத் தகுதியுடனே செய்தல்
தன்மையாய்ப் பின்னிருப்பு உண்மையுட னிருத்தல் ()

---

## 30 தொழுகையின் வாஜிபுகள்

இராகம்-நாதநாமக்கிரிகை-தாளம்-மிஸ்ரஜாதி-ஏகம்.

ஆனந்தக்களிப்பு.

சங்கர்தங்கும் முஸ்லீமோரே நபி சாற்றியதீன்வழி சாதகம்பாரே(ச

மங்களமெல்லாங் கொடுக்கும் மன
மாசற்றதொழுகையில் வாஜிபெடுக்கும்
சங்கதிபதினெட் டடுக்கும் இதைத்
தானறிந்தேசெய் சந்தோஷந் தொடுக்கும் (ச)

தொடுத்தல் ஹம்து முதலோது பின்பு
சூராவொன்றல்ல தாயத்து மூன்றோது
அடுத்து முந்தின றக்காத்து ரெண்டில்
அவசியமாய்கிரு அத்தோதல்போதும் (ச)

போதஞ்செய்யல்ஹம்தை முன்னும் பாவம்
போக்கிடுஞ்சூரத்தை யோதுதல்பின்னும்
மாதவத்தேதின நண்ணும் செயல்
வகைவிபரங்கள் வழுத்துவேனின்னும் (ச)

இன்னுமொவ் வோரிறக்காத்தில் சஜ்தா
இரண்டுந்தொடர்பிடி யாகச்செய்கோத்து
சின்னமில்லா றுக்கூ கேத்து வாச்
செயுமுன்கிரு அத் முடித்தேயடுத்து (ச)

அடுக்குஞ்சிறுவிரு புடனே சிறி
தானிலையி லமைதியுடனே
எடுக்குஞ்சஜ்தா றுக்கூகுடனே நிலைத்
தேசெய்தோர் பாவங்களேகு முடனே (ச)

ஏகன்சொல் முன்னிருப்பிருத்தல் இரண்
டிருப்பிலுமத்தகிய் யாத்தையுரைத்தல்
வாகாய்வறசூலகு வில் நிறுத்தல் பறுல்
வாஜிபுகளையவ்வத் தானம் பொருத்தல் (ச)

பொருந்தமுன் னிருப்பினிலத்த ஹிய்யாத்
பூர்த்தியாயோதி முடித்தபின்மெத்த
சுருக்காயெழல் தொழற்குற்ற தெல்லாஞ்
சோர்வின்றிச்செய்து சலாமுங் கொடுத்தல் (சங்)

செய்யும்வித்றுத் தொழுகையிலே குனூத்
சேரவேயோதல் தொழுமுடுகையிலே
உய்யுந்தக்பீர் கொண்டுமுயலே நம
துண்மைநபியிற சூல்சொன்னசெயலே (சங்)

சொன்னவிரு பெருநாளும் குத்பா
தொழுவாறுதக்பீரோ டொருதக்பீர்மீளும்
பன்னுங் கிறுஅத்தைக் கேளும் இடம்
பார்த்து மெதுவோடிரைந்தோ தெக்காலும்(சங்)

ஓதலிமாமவர் பின்னே துடர்ந்.
துள்ளபறுல்களுவந்து செய்மின்னே
நீதமிவ்வாஜிபைச் சொன்னே னிதன்
நேர்மையறிந்து முளத்தினிலுன்னே (சங்)

---

## 31. நொண்டிச்சிந்து.

சித்திதருந் தொழுகையில் சுன்னத் துச்
சேர்ந்திட்ட பத்தொன்பதும் விபரமுடன்

புத்தியி லறிந்துசெய்தோர் சுவக்கம்
புகுவரெனப்புருக்கான் புகன்றதிடன் (சி)
புகலுவேன் கிபுலாவின் எதிராகப்
பொற்கரமிரண்டும் விரித்துயர்த்திடுதல்
வகையுட னுந்தியின்கீழ் இடதுகை
வைத்துவலக்கையதன்மேல் வைத்துக்கட்டுதல் (சி)
கட்டுதல்பெண்கள் நெஞ்சில் தனுஅலூதுங்
கத்தன்பிசுமிலுமோதிக் கைகளிரண்டும்
முட்டிலே விரித்துப்பிடித்தல் தலையொடு
முதுகுஞ்சமப்படுதல் சரியதென்றும் (சி)
சரியுடன் மூன்றுமுறை தஸ்பீகு
சாற்றித்தலையதனைத் தானெடுத்து
நெறியுடனே றப்பனா லக்கல்ஹம்தென்று
நிமிர்ந்துசிறுநிலையி லேயடுத்து (சி)
அடுத்திட மூக்கதனை தரையினி
லணைத்திடல்கையுமுழங் காலுமொருங்கே
தொடுத்திடுகிபுலாவை நோக்கிடச்
சொன்னகைமுட்டும் முகத்திநேர் நெருங்கே (சி)
நேர்வது மூன்றுமுறை தஸ்பீகு
நிகழ்த்தித்தலையெடுத்தல் எழுறுப்பின்
பேர்தலை முட்டுப்பாதம் கைகளின்
பேரில்பொருப்புடன் சஜ்தாச்செய்யுமின் (சி)
சஜிதாவிற்றரை துடையில் கெண்டைக்கால்
தாக்காமலும்வயிற்றில் துடைமுழங்கை
இசையா தாண்பிள்ளைகள் செய்திட
லெல்லாம்பொருந்தப்பெண்கள் செய்வதொழுங்கே (சி)
செய்யவிரு காலுமடித்தல் இருப்பினிற்
சேரவேவலதுகால் படத்தைநிறுத்தல்

உப்புமிரு சஜ்தாவின் இடையினி
லுவந்துசிறுவிருப்பு மகிழ்ந்திருத்தல் (சித்)
இருப்பினில் கைகள்விரித்து துடையின்மே
லிருத்தல்சலவாத்தோதல் வலமிடமாய்
திருப்பிச் சலாங்கொடுத்தல் தக்பீர்
செப்பிக்குனிதல்நிமிர்தல் செய்திடமாய் (சித்)
நிடமுட னிவைகளெல்லாம் தொழுகையிற்
சிறந்தசுன்னத்தெனாம் நபிநமக்கே
தொடர்ந்தனு தினமியற்ற சொன்னதை
தொடுத்தேனவருக்குங் கவித்தமுக்கே (சித்)

## 32 தொழுகையின் முஸ்தபுகள்

இராகம்-சங்கராபரணம் தாளம்-ஆதி-யேகம்.

### கண்ணிகள்.

முஸ்தகபான செயல்கள்தொழுகையில் மூவைந்துளதாகும் அந்த
முற்றிலுமறிந்து சொல்வே னடர்ந்திடுவது முஸ்லீம் முறையாகும்
தக்பீர் கட்டிடும் போதினி லாடவர் தன்கை களைத் தூக்கல் காது
தனிலுள்ளசிறு சோணையிற்பெருவிரல் தாக்கும்படியாக்கல்
மாதர்கள் தோள்வரை கைகளை யுயர்த்திடல் மற்றது பொதுவாக
[செய்தல்
வளமுறுசட்டைகை நலமுறவுயர்த்திடல் மகிமைகுடியாக
கிருஅத்தை மூன்று யத்தின்மே லுயர்த்தல் கீழ்முந்தின இருப்பில்
[வரு
கின்றபின்றக்காத்தில் அல்ஹம்தை யோதிடல் கிருபாகரண பொப்
]பில்
இருகாலுக்குமிடை நாலங்குலவெளி யிருக்கும்படி நிலைத்தல் வலம்
இடந்திரும்பாமலும்இருமல்கொட்டாவி வந்தியங்காமற்றுநிலைத்தல்
முழங்காலிருகைகள் மூக்குநெற்றியிவை முறையே தரைதனிலே
[வைத்து

முதல்நெற்றி நாசிகை முழங்கா லெடுப்பது முறையாம் சுஜூதினி
[லே
தனித்தவன் ஒற்றைப்படமூன்றுமுறைக்குமேல் தஸ்பீகோதிடுதல்
[நல்ல
தனதுகைப்பெருவிரல் காதின்சோணைகளினேர் தாக்கிசுஜூ
[திடுதல்
கன்னம்பின்னிருப்பவர் காணத்திரும்பிச்சலாங் கழர் அதுவரை யுட
[லில் மண்
கல்வியர்வை துடையாதிருப்பதுமெனக் காணுங் கவிக்கடலில்
தொழுகையில் முஸ்தகபு பதினைந்துமிதுவெனச் சொன்னார் பெரி
[யோர்கள் மிகத்
துதியொடுபணிபவர் கதியடைவது நிசஞ்சொன்னேன் அறிவீர்கள்

---

## 33 தொழுகையில் முறிச்சல்கள்.

இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

முறிச்ச லுண்டாகு மறிவீர் தொழுகைதனில் (மு)

அனுபல்லவி.

ஒருதொழுகையில்மறு தொழுகையை யெண்ணில்
உறுப்பில்நோயிலர்பறுல் மறுத்தல் ஏதாவதுண்ணில் (மு)

சரணம்.

திருமறைபார்த்தோ ஒருவர்சொற் கேட்டோசெப்புதல்மறதியிலே
முறண்டினிலே
பொருள்பட வொன்றலது பொருளற்றரெண்டெழுத்துப் புகலுதல்
வீணேகணைத்தல் [தொழுகையிலே
வருமறதியினிலே யுறங்கினை வதினிலே வழுத்தல் சலாமிதிலே
யாதுடன்பதில்
தருவது துன்பத்தொனி வருவது பிணிமிடி தாக்கி யழுவதிலே
இமாமையின்றிக்

குறித்துக்கிற அக்கைவெறு நக்தருக் குரைத்தாலுங்
கொண்டதும் மகின்பதில் குண முட னுரைத்தாலும்
வரித்த உடைவிலகி மானத் தெரிந்தாலும்
வரும்பசர் தொழுகையில் வான்ரவி தெரிந்தாலும் (மு)

வேதஅதிதுகளில் ஒதா வுலகப் பற்றைமேவித் துவாவிறத்தல் இமாமானவர்
ஒதலில் முக்ததிப லாதவ ருரைகொள் லொலிபெற வேசிரித்தல் தொழுகைக்குற்ற
தீதற்ற செயலின்றிப்பேதுற்ற பலவிதச் செயலதிகம் விரித்தல் தயமஞ்செய்து
நீதமுடன் றெழுகும் போதுதண்ணீரவன்னேர் பெறவேதெரிந்தால் முறண்பாடாக

எ தும்உனுமுறிக்குந் தீதுறிற்றுனே
இலங்குந்தொழுகைமுறிந் திடுமெனநாணே
நீதமுடனிதனை யுரைத்தனன்பேனே
நிச்சயமாய்ச்சுவனப் பதிதருந்தீனே (மு)

---

## 34 நாயகமவர்களின் தலைமுறையறிவதன்பறுலு

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

தோகையரு

மஞ்சாடரிய குடையுடைய மகுமூ திறகு லவர்களின்
தஞ்சே ருயருந் தலைமுறைய தறியும் பறுலை யறைவேனே

பாட்டு.

தென்பாயிவர்பிதா வென்போரு மப்துல்லா
முன்பாரவர் பிதாவப்துல் முத்தலிபென்னு

சுருள்

முதத்ரவர்பிதா எத்திமு மர்காசிம் மற்றுமவர்பிதாவுற்றவப்துல்முனைப்

---

## 35 மதுகபை அறியும்பறுலு

இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

வாருமுஸ்லீமெல்லோருமே வழி முறையறிந்தனுதினம் (வா)
நேரும் மதுகபநில் நிகழ்த்தும் நான்குவகை
சேர வெடுத்துரைப்பேன் தெளிவுடனே இதில் (வா)

சரணம்

பாரிமா மனபிமாலிக் ஷாபியெனப் பகரும் ஹம்பலென்றும்
அனபியிமாம்
ஒருங் கூபாவில்தாபித் தவர்மக னுறநுஉமா னென்றும்
மாலிக்கிமாமுந்
தேருமேமதீன த்தின் மாலிக்மகன் திருமுகம்மதென்றும்
ஷாபியிமாமே
நேரும் நபிவழியிலே யிதுரீஸ்மகன் நிகழுமுகம்மதென்றும்
ஹம்பிலியிமாம்
பேரும்ஹம்பலின் மகனகுமதுவாம்
பிரியமாயுவந் தறிபறுலிதுவாம்
சேருந்தீன்முறையிற் றெளிந்துறைத்ததுவாம்
தினமுவந்துறுதிசெய் திறமிறைதருவான். (வா)

---

## 36 ஆண்களணியக்கூடாதவுடைகள்.

இராகம்-இந்துஸ்தானி-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

ஆண்களுக்காகாத வுடை யாமதனை யெடுத்தோத (ஆ)
காணும் பட்டுடையுடனே உருவங் காட்டுமுடையுங் கழுந்திடனே()
தோணுங்கம்பளி யுடையே இதில் தொடருமக்றூகென்னுந்தடை
யே (ஆ)

---

## 37 உடையுடுத்தும் ஒழுங்குகள்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

வஸ்த்ரமுடுத்தும் வகையதையறிவீர் ஒழுங்குடனே
வண்மையாகிய சுன்னத்தைப்பெறுவீர் பட்டு
மற்றகம்பளி யுற்றிடாதபஞ் சிற்றநூமுடை பற்றலேநலம்(வ)
தொப்புளு முழங்காலு மறைய்வே உடுத்திவஸ்த்ரஞ்
சும்லாவுட னேமுழுமுழுமே சிரசிற்கட்டித்
தூயசட்டை சிராய் முதலிய தாயணிவதா ணேயருக்கென[]
பெண்களுக் கெல்லா வுடையாலும் சர்வாங்கமறையப்
பிசகற வுடுத்தே கொளவாகும் அதின்முகம்
பின்னு மணிக்கட் டின்னுங் காண்டை யென்னுமுறுப்பு தன்னைத்
தவிர (வஸ்)

---

## 38 சயனிக்கலாகாத இடங்கள்.

இராகம்—சகானு—தாளம்-ஆதி-ஏகம்.

தூங்கக் கூடாதவிடம் எழுண் டதைச் சொல்லுவேனுவந்துகேளும்
பாங்காயறிவுகளோராளும் பேசும் பக்தியுளதலமென்றாலும் (தூ)
அறிவுகளை மகிழ்ந்துகேட்குந் தல மதிலுந் தொழுகுமிடம்நீக்கும்
உரிய பள்ளியிலு மேர்க்குங்குர்ஆ ணோதுமிடத்துமெனநோக்கும்
கூறும் சபையதிலும் மின்னுஞ்சூர்யன் கோரு முதயாஸ்தமென்னும்
நேரமதிலுமெனவின்னுஞ்சயனம் நீக்குமுறையிதுவென்றெண்ணும்.

---

## 39 பேசக்கூடாத தலங்கள்

இராகம்-பைரவி-தாளம்-ஆதி.

பல்லவி

பேசக்கூடாத பதின்மூன்று தலம் பேணவேண்டுந் தீனோர்களேசா
ன்று (பே)

சரணம்.

பெரியோர் களின் முன் னிலையிலுஞ் சபையிலும்
பிசகற வறிவுகள் பேசுமிடந் தனிலும்
உரிய தொழுகையிலு முடையதோர் பள்ளியிலும்
உற்ற வுலுச்செய்போதும் பாங்குரைத்திடையிலும் ()
மருவற மலஜல மகற்றிடும் போதும்
மாதா பிதா மதி வழுத்திடும் போதும்
புருடன் பெண்டிருவரின் கலவியின் போதும்
புனிதகுருன் குத்பா வோதிட மீதும் [பே]
இந்தவிடங் கள்பதின் மூன்றையு மறிந்து
இருப்பது பேசா தெனவுரை மகிழ்ந்து
தந்த நபிவழியில் தான்நிலைத் துவந்து
தன்மை யுடனிருக்கச் சாற்றினேன் தெளிந்து. [பே]

## 40 உணவுட்கொள்ளும் ஒழுங்குகள்

இராகம்-செஞ்சுருட்டி தாளம்-ஆதி.

கண்ணிகள்.

உணவருந்தும் ஒழுங்குகளை ஓதுவேன் ஓதுவேன் ஓதுவேனே
நான் ஓதுவேனே
தினமுவந்த பசியுறவே உலுச்செய்தமர்ந் தேதா னசையாமலே
வண்மைபிஸ்மி லோதிச்சிறுபிடி வாகாய்ப்பிடித்து முக்கால்வயிரே
அன்னமும் தண்ணீரு மாய் உண்டல்ஹம்து லில்லாவென்று சொல்
எண்ணமதில் நிறப்பமுற நம்மிஸ்லா முறைநின்றியம்பிபதே [வியே

## 41 தண்ணீர் அருந்தும் ஒழுங்குகள்

இராகம்-சிந்துபைரவி-தாளம்-திஸ்ரம்-ஏகம்.

கன்னிகள்.

தண்ணீர்குடிக்கும் விபாமுறைத்திடத் தானறிவீரெங்கள் தீனோரே
பண்ணரியபிஸ்மி லோதிமூன் றுமுணர் பாங்குடனே யருந்துவீரே
திண்ணமுடனடர்ந்தும் லேலைசெய்துந் தேகமலுத்தபோதுண்ணீரே

எண்ணியுமாயாசந்திர்ந்தபின்னருந்தலின்னமுஞ்சொல்வேனறிவீரே
கண்ணியமாய்ப்பெண் கலவியுலும் படுக்கைதனிலு மாகாதென்றாரே
ண்ணயமாயீதறிந்து ஒழுங்குடன்சேர்வழியைப் பெற்றுயர்வீரே

## 42 தண்ணீர் நின்றுகொண் டருந்துமிடங்கள்

இராகம்-அமீர்கல்யாணி தாளம்-ஆதி.

நின்றுநீருந்தலாகின்ற தலமது நேர் தண்ணீர்ப்பந்தல்
என்றுமே அருவிகுளமந்த நெருக்கடியிங்குந் தலத்துந்தான் (நி)
உலுச்செய்து மிகுந்ததண்ணீரும் உறைஸம்ஸம் கிணற்றுதண்ணீரும்
வலுவுடன் குதிரைமுதலேறும் உரியதோர் வாகனந்தோறும் (நி)
இந்தவேழிடத்திலெல்லோரும் நிலைதனிலே யுண்ண நீரும்
முந்தவே யாகுமென்றாரும் மறைநபி மொழியசொற்பாரும் (நி)

## 43 அறுப்பில் பறுலுகள்

இராகம்-அமீர்கல்யாணி தாளம்-ஆதி.

பல்லவி.

அறுப்பினில் நான்கு பறுவகை தறிகுவீரோங்கு மெய்தாங்கும் (அ)

அனுபல்லவி.

விருப்பமுடனே யுண்ண வேண்டுவோர் தீனிலென்ன
விதித்தவஸ்துக்கள்தன்னை உண்ணுமென்ன. [அ]

தோகையறு.

அறுப்பவன்தீனிலே யாறைந்துகாரிய மறிந்துளோனு யிருந்து
பொருப்புள்ளகுரல்வளை முடிச்சிதன்நடுவிலேபுனிதபிசுமிலையுவந்து

பாட்டு

ஓதியதனிலோங்கு முற்றநரம்புநான்கு
முணியறுத்துநீங்க ளுண்ணுமிந்த [அ]

## 44 அறுப்பில் சுன்னத்துகள்.

இராகம்-சிந்துபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

அறிகுவீ ரறுப்பில்நான்க தாகுஞ்சுன் னத்திதுவே (அ)

அனுபல்லவி

முறையோடாடு மாடிவைகளை முற்றும்படுக்க வற்றிடலென (அ)

தொகையரு.

பட்சிகளி னைக்கை களிற்பிடித் தேயுசும் பாதடக்கிக் கொள்ளுதல்
பகருமெய்க் கிபுலாவை சேர்படுத் திடுவதொடு பதமுள்ளகத்திகொ
பாட்டு ளுதல்

பாருமிந்தமுறையிற் பண்பாயறுப்பதுவே
பற்றியசுன்னத்தாமறுப்பினி லுற்றிதன்வழிபெற்றுணலென

---

## 45 அறுப்பில் முஸ்தகபுகள்,

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி.

பல்லவி.

அறுப்பினில் முஸ்தகபை யறிகுவீரே நான்
.தாகுமதன்விபரந் தெரிகுவீரே. [அ]

அனுபல்லவி

அறுபட்ட துயிர்போகு மளவுங்கத்தி கழுவா
துரையு மாடா திருத்தல் உண்மையிது வழுவா [தறு]
அறுப்புக்கு முன்னும் பின்னு மரியகலிமா வுடன்
விருப்புற்ற சலவாத்து மேவியோதுதல் கடன் [அறு]
திருத்தமுடனேரத்தஞ் சேர்ந்தவுடை யுடம்பின்
உறுப்புங் கத்தியுஞ் சுத்தமுடன் கழுவிடுத லென் [றறு]

---

## 46 அறுப்பில்மக்றூகுகள்

இராகம்-நாதநாமக்கிரிகை-தாளம்-மிஸ்ரம்.

பல்லவி.

அன்பர்களேயறுப் பில்மக்றூகான தறியும்வகையேழாம் அதில்
ஆனதிடைஞ்சலில் லாதவிடங்கிபுலாவதை விட்டேர்திருப்புதலாம் ()

சரணம்

தென்பாயலுக்கப் படும்ஸ்துவின்காலைச்சேரப்பிடித்திழுத்தேகுதல் [அதைப்
பண்பாயறுக்கக் கட்டித்தள்ளிக்கத்தி பதஞ்செய்தல் கத்தியைத் [தேடுதல் பிட
ரின்புறத்தேயறுத்தல் லுயிர்போகுமுன் னேயதல்தோலையுரிக்குதல் [நாலு
நன்னரம்புக்குக்கீழுள்ளவெண்ணரம்பைநாட்டமுடனின் றறுக்குதல் [தலை
தன்னைத்துண்டாகத் தரிக்குதல் இதை
எண்ணிமனதிலிருத்திடுவீர் முஸ்லீம் (அன்)

---

## 47 பெண்களுக்கு ஹைலுநிபாசின் விபரம்

இராகம்-தேசிகதோடி தாளம்-ஆதி.

பல்லவி.

பெண்ணிற் குளவிபரந்தானே பேசிடுவது தினே (பெ)

அனுபல்லவி.

வண்ணஞ் சிவப்புப்புச்சை பொன்களநீரும்
மண்ணெடு கருப்பென மாதங்கள் தோறும்
வின்னமில்லாமலே குறிதனி லாரும்
விபரமதிற்சில விளம்புவேன் பாரும் (பெ)

சரணம்.

குஞ்றீவேநாள் மூன்றதிகநாளும் குறித்தபத்து
வரையே யிருந்துகெடும் மேலும் வயதொன்பது
நிறையேகொடுத்தன்பத்தைந்தாலும்நிலைக்குமிதை
உரையே நிகழ்றுதுவென் றாலும் உணர்வதுண்டு

செனித்தனிறந்தவிற மறுநிற முதிக்காலுஞ்
செப்பியகணக்குகள் சிர்நிலை குலைந்தாலும்
மகப்பெறில்நாற்பது நாளினை மிகுந்தாலும்
மதித்திடல் நோயென வழுத்து கிதத்தினாலும் (பெ)

---

## 48 இன்னதைவிட்டால் இன்னதுவருமெனல்

சந்தக்கலிவிருத்தம்.

ஆதியான பருலைவிட்டால் ஹறாமாகுமே தொழுகை முறிந்துவிடும்
ஓதும்வாஜிபை விட்டிடிற் பாவம்வந் துற்றிடும்மக்றூ குத்தகரீமினம்
தூதர் சுன்னத்தை விட்டிடிற் றோஷமாஞ் சுத்தமான மக்றூகது
[தோன்றிடும்
நீதமுஸ்தகபைவிடிற்கேடிலைநேர்மையோடறிந்தோரு முஸ்லீமினே

பரிகாரம் சந்தவிருத்தம்.

தொழுகையிற்பறுல்விட்டால்திருப்பியேதொழுவதுபருல் வாஜிபை
[விட்டிடில்
பழுதறச்சஜி தாச்சகுவுசெய்வது பண்பதுந்தவறிற் றொழுகைதனை
முழுதுமேதிருப்பித்தொழல்வாஜிபா முற்றசுன்னத்தை விட்டிடிற்
[குற்றமாம்
வழுவிலாமலியற்றியபேர்க்கன்றோ வல்லவன்சுவர்க்கந்தருவானரோ

---

## 49 மங்களம்

இராகம்-உசேனி தாளம்-திஸ்ரஜாதி-ரூபகம்

பல்லவி.

மங்களஜெயமே தினம் மங்களஜெயமே

அனுபல்லவி.

மண்டலந்து லங்கவந்த பண்டைமறை யேன்றுங்குன்று (ம)

சரணம்.

ஆதநபிபாதந் தீதற்ற மங்களம்
அனமுறுசலீ மம்பியா மங்களம்
நீதமுகம்மதர் பாதமே மங்களம்
நேருறுநால் யார்களுமறு வோர்களுமசு காபுகடின (ம

நல்லவிமாம்க ளசைனுசைன் மங்களம்
நாதர்முகையதீன் பாதமே மங்களம்
மன்னுமொலிமா ரியாவரு மங்களம்
மதிமிகுமுல மாவொடுநல்ல கதியுறுமுசு லீமனைவரு (ம)

உற்றபனுவல் படித்தவர் கேட்டவர்
உள்ளத்திருத்தி யுவந்து நடந்தவர்
வெற்றிக்கலைதந்த யென்குருவானவர்
விண்ணினு மண்ணினுமுளபல புண்ணிய நணியயாவரு (ம)

நற்புனிதப்புல வோர்களு மங்களம்
நாடுமுயர்சபை நாடோறு மங்களம்
அற்புதமப்துற் கரீம்கவி மங்களம்
அனைவருமனை மகவொடுநிதி தனையுறவருள் பெகிடவரு (ம)

மங்களஜெயமே தினம் மங்களஜெயமே

முற்றிற்று.



## இப்புத்தகம்



திருப்பத்தூர், முகமதிய கலாசாலையிலும் காரைக்குடி, ச. பீ. ந. மு. ஜவுளிக்கடையிலும், ஷியூர் அ. கா. ஷாப்கடையிலும் கிடைக்கும்.

